# வேட்கை

கு.பா. வெங்கடாசலம்

வாழ்க்கைப் புயலில் அகப்பட்டுத் துரும்பு போல் சுழன்று கொண்டிருந்தேன். வயிற்றின் பசியைத் தணிப்பதற்கு ஒரு யந்திரம் போல் வேலை செய்தேன். அணுவளவாவது இன்பம் - சாந்தி யில்லை. வயிற்றிற்காக உழைப்பதில் கூடச் சலிப்பு ஏற்பட்டு விட்டது. அந்த வாழ்க்கையில் ஒரு சிறு மாறுதல் தேவையிருந்தது. அதற்காக வெறி கொண்டு அலைந்து திரிந்து கொண்டிருந்தேன்.

இந்தச் சமயத்தில்தான், தென்றலில் கலந்த சுகந்த வாசனை போல், அவள் வந்தாள். சலிப்படைந்த - உணர்ச்சியற்ற உள்ளத்தில் ஒரு கோடியில் இன்ப ஊற்றை நிர்மாணித்தாள். எனது அமைதியற்ற வாழ்க்கையில் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கினாள். சாந்தி ஆசனத்தில் வீற்றிருக்கச் செய்தாள். அதுதான் நான் வேண்டிய மாறுதல் - சொர்க்கானுபவம்.

சுந்தரி! ஆம், அவள் பெயர். அவளை என் வாழ்வின் மாறுதலுக்காகவே சந்தித்தேன் போலும். அருள் பொங்கிய கண்களின் பார்வை என் மனதில் நெகிழ்ச்சியை உண்டாக்கியது. ஆசை இழுத்துச் சென்றது. எவ்விதமாகவோ கஷ்டமுற்றேன். கடைசியாக அவளை - அந்த இன்ப உருவை அடைந்து விட்டேன். பெரும் பாக்கியசாலி என்று பெருமிதம் கொண்டேன், அவள் எனது மனைவியானதற்காக.

அன்றுதான் முதல் நாள். அவளுடன் பேசிக் கொண்டிருந் தேன். அப்பொழுது சொன்னாள், ''நாதா! உலகம் ஒரே மாதிரியா யிருக்க விரும்புகிறதில்லை. எப்பொழுதும் மாறுதலை வேண்டித் தான் தவிக்கிறது. இன்று நீங்கள் என் மீது விருப்பாயிருக்கலாம். நாளை வெறுப்படையலாம். இது உலக இயற்கை; மனிதர்கள் சகஜமாய் விரும்புவது!'' என்று.

மாறுதல் வேண்டிய என் மனதை அவள் அறிந்து கொண் டாளா? ஏதாவது ஜாலங் கற்றவளா? நிச்சயமாய் ஜாலக்காரிதான், சலிப்படைந்த உள்ளத்திற்குச் சாந்தியளிக்கும் சக்தியுள்ளவளா

யிருந்ததால், சந்தேகமில்லை. அவள் ஒரு ஜாலக்காரிதான். இவை அந்தச் சமயத்தில் என் மனதில் ஓடிய எண்ணங்கள். பதில் பேசவில்லை. எங்கும் அமைதி - என் மனது மாத்திரம் 'டக் டக்' என்று அடித்துக் கொண்டிருந்தது. அந்த மௌனத்திலிருந்து அவள் என்ன அறிந்தாளோ? என்னிடம் சொல்லவேயில்லை.

காலம் வேகமாய்ச் சென்றதில் இரண்டு வருடங்கள் கழிந்தன. எங்கள் வாழ்க்கையில் இன்னொரு ஆத்மாவும் வந்து சேர்ந்து கொண்டது. தாயைப் போல் பிள்ளை. சுந்தரன்தான். என் இன்பத்திற்கு முற்றுப் புள்ளியாய் அமைந்தவன். வாழ்வு முன் போல் ரஸமாயில்லை. ஏதோ வருவதும் போவதுமாயிருந்தது. நிலைபெற்ற இன்பம் இல்லை. வெறும் பாலைவனம் மாதிரித் தோன்றியது. என் உள்ளத்தில் ஊறிய இன்ப ஊற்றுக்கள் வரண்டு பாழடைந்து விட்டன.



வாரத்திற்கு ஒருமுறை பையனுக்கு ஏதாவது அசௌகரியம். ஓய்வு ஒழிவில்லாமல் அவனுக்கு வைத்தியம் செய்ய வேண்டும். இதிலேயே என் மனம் முக்கால் வாசி சோர்ந்துவிட்டது. தொழில் செய்வது தடைப்பட்டது. வருமானம் இல்லை. வாழ்க்கையின் இனிமை மாறிக், கசப்பு எல்லைக்கு வந்து விட்டது. மறுபடியும் அடுத்த மாறுதலைத் தேடி அலைந்தது மனம்.

அப்பொழுதெல்லாம் உலக வாழ்வு சதமில்லை - நிச்சய மில்லை - வெறும் ஏமாற்றம் - மாய்கையின் தோற்றம் - என்றெல் லாம் ஒரு பெரும் யோகி போல் நினைப்பேன். பைத்தியம் போல் ஒரு பக்கம் போய் ஏதாவது முணுமுணுத்துக் கொண்டிருப்பேன். பட்டினத்தார் பாடல்களைப் பாராயணம் செய்வேன்.

புது ரோஜா போன்ற அவள் மேனி வாடி வதங்கிச் சருகாய் உலர்ந்து விட்டது. அவளைக் காணும்போதெல்லாம் கோபம் காரணமில்லாமலே வரும். இவ்வளவு மனச் சோர்வுக்கும் அவள்தான் காரணம் என்று. அன்று மலர்ந்த மலரைக் கசக்கி முகர்வது போல் என் வாழ்க்கையில் அவளை நடத்தினேன். கண்களில் எப்பொழுதும் நீர் துளிர்த்துக் கொண்டேயிருக்கும். அமா வாசை வானம் போலிருந்தது அவள் முகம். அவளைப் பார்க்க என் மனம் வைரமாய் உறைந்து போனது எனக்கே வருத்தமாயிருக்கிறது.

வயிற்றில் ஒன்பது மாதம் சுமந்து கொண்டிருந்தாள். ஒருநாள் இரவு பன்னிரண்டு மணி இருக்கும். வயிற்றில் சகிக்க முடியாத வேதனை. படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள். பையன் தலைப்பக்கம் நின்று அழுது கொண்டிருந்தான். நான் எனது வைர

நெஞ்சுடன் பக்கத்தில் நின்று தைரியம் சொல்லிக் கொண்டிருந்தேன்.

''உங்களைத்தானே!'' என்றாள் என்னை நோக்கி.

''என்ன? சும்மா படுத்திரு,'' என்றேன்.

''எனக்கு முடிவு வந்து விட்டது. என்னால் வேதனை சகிக்க முடியவில்லை. நெஞ்சில் ஏதோ பண்ணுகிறது!'' என்றாள் ஓர் தீர்க்கதரிசிபோல்.

''அப்படி எல்லாம் சொல்லாதே! சும்மா படுத்திரு. விடியற் காலை டாக்டரை அழைத்து வருகிறேன். அதுவரை பொறுத்துக் கொள்,'' என்று தைரியப்படுத்தினேன். அதற்கு மேல் எனக்குச் சொல்ல வாய் வரவில்லை. அவ்வளவு கஷ்டப்படுகிறாள். அந்தக் காட்சி என் நெஞ்சை உருக்கி விட்டது.

''எனக்கு இவ்வுலக வாழ்வில் சலிப்பு ஏற்படவில்லை. உங்களுடன் வாழ்வதில் சலிப்பும் கிடையாது; சாந்தமும் கிடையாது. இரண்டும் இரவு பகல் போல் மாறி மாறி வந்துகொண்டிருந்தது. நீங்கள் விரும்புகிறீர்களே! அந்தப் பொய்ச் சாந்தி, அது எனக்கு வேண்டாம். நான் விரும்பியதில்லை. ஆனால் எனக்கு இவ்வாழ்க்கையின் முடிவு சீக்கிரம் ஏற்படும் என்று தெரிகிறது. என் காலத்துக்குப் பிறகு உங்கள் வேட்கை பூர்த்தியடையலாம். ஆனால் மனிதனின் ஆசைக்கு எல்லையே கிடையாது.....'' என்று என்னவெல்லாமோ சொன்னாள். நான் அப்படியே சிலை மாதிரி நின்று கொண்டிருந்தேன். என் கையைப் பிடித்துத் தன் நெஞ்சில் வைத்தாள். ஏதோ சொன்னாள், வார்த்தைகள் உதட்டிலேயே அடங்கி விட்டன. அவள் நெஞ்சு என் மனதைவிட வேகமாய் அடித்தது. சற்று நேரத்தில் துடிப்பின் வேகம் குறைந்தது. முகத்தைப் பார்த்தேன்.

அன்று - முன்னால் - முதல் முதல் - அவளை அந்த வீட்டின் முற்றத்தில் பார்க்கும் பொழுது இருந்த சோபையைப் போல் பதின்மடங்கு பெருகியிருந்தது. ஆனால் அன்று என்னைப் பார்த்த கண்கள் இன்று மூடிக் கிடந்தன.

– 1936